அற்றவர்கள் "கார்பண்ய" விஷயத்தில் என்னைவிட மேலானவர்கள். நான் உன்னை 'ரக்ஷகி'யாக அறிந்திருக்கிறேன். ஆகையால் அடுத்தபடியில் என்னை 'க்ருபண'னாக அங்கீகரித்து அனுக்ரஹிப்பாயாக!

குறிப்பு:—எவ்வளவுக்கெவ்வளவு அறியாமை அதிகமோ அவ்வளவுக்கவ்வளவு "கார்பண்யம்" உடையவனாயிருப்பதில் சிறப்பு என்பது கருத்து.

34. I pray that you will agree to grade eligibility to receive your compassion in the following manner:—those who are thoroughly ignorant of what the Vedas say on Brahman and Jīva and the means of the latter attaining the former, shall be placed first; and those who have just learnt (like me) that it is your nature to relieve the distressed, shall come next.

मातः करोषि ममतां मयि यावदीषत्
तावद्यते मम ततः किमिवास्ति साध्यम् ।
मामित्थमित्थमुपयुङ्क्ष्व न विस्मरेति
किं स्वामिनं त्वरयते क्वचन स्वभृत्यः ॥ ३५ ॥

மாத: கரோஷி மமதாம் மயி யாவதீஷத்
தாவத்யதே மம தத: கிமிவாஸ்தி ஸாத்யம் ।
மாமித்த்மித்த்முபயுங்க்ஷ்வ ந விஸ்மரேதி
கிம் ஸ்வாமிநம் த்வரயதே க்வசந ஸ்வப்ருத்ய: ॥ ௩௫ ॥

मातः=அம்மா! मयि=என்னிடத்தில் ईषत् ममताम्=கொஞ்சம் அபிமானத்தை यावत् करोषि=எவ்வளவில் செய்வாயோ, तावत् यते=அவ்வளவு வரை முயலுவேன். ततः किमिव मम साध्यमस्ति=அதற்குமேல் நான் செய்யவேண்

டியது என்ன இருக்கிறது? स्वामिनम्=எஜமானனை स्वभृत्यः= அவன் ஊழியன் माम् इत्थम् इत्थम् उपयुङ्क्ष्व=என்னை இன்ன இன்ன விதமாக உபயோகப்படுத்திக்கொள் न विस्मर इति= மறக்காதே என்று कचन=எங்கேயாவது किं त्वरयते=துரிதப் படுத்துவதுண்டா?

(க-ரை) என் பிரயத்னம் எதுவரையில் என்றால் "இவன் என்னை ஆச்ரயித்தவன்" என்று உனக்கு என்னிடம் அபிமானம் உண்டாகும் வரையில்தான். அதற்கு மேல் எனக்குச் செயல் இல்லை. வேலைக்காரனை ஏற்றுக் கொண்டபிறகு பிரபுவல்லவா அவனை எவ்விதமாக உபயோகித்துக்கொள்வது என்பதைச் சிந்திக்கவேண்டும்.

35. Mother, I shall exert myself just to such an extent as would suffice to induce you to regard me as your own. More than that, I need not trouble myself about. Does any servant constantly remind his master that the latter should not forget to utilise his services in this or that manner?

त्याज्यं त्यजानि विहितं च समाचराणि
नित्येषु शक्तिमनुरुध्य हि वर्तितव्यम् ।
तद्बुद्धिशक्तिमनुरुध्य न कार्यशक्ति-
मित्येतदेव तु शिवे विनिवेदयामि ॥ ३६ ॥

த்யாஜ்யம் த்யஜாநி விஹிதம் ச ஸமாசராணி
நித்யேஷு ஶக்திமநுருத்ய ஹி வர்திதவ்யம் ।
தத்புத்திஶக்திமநுருத்ய ந கார்யஶக்தி-
மித்யேததேவ து ஶிவே விநிவேதயாமி ॥ ௩௬ ॥

त्याज्यम्=விடவேண்டியதை त्यजानि=விடுவேன். विहितम् च=செய்யவேண்டியதையும் समाचराणि=செய்வேன். नित्येषु=நித்யவிதிகள் விஷயத்தில் शक्तिम्=சக்தியை अनुरुध्य हि=, பொறுத்தல்லவா वर्तितव्यम्=நடந்துகொள்ளவேண்டும். शिवे=ஈச்வரி! तत्=அதுவும் बुद्धिशक्तिम्=புத்தி சக்தியை अनुरुध्य=அனுசரித்து न कार्यशक्तिम्=கார்யசக்தியை அனுசரித்து அல்ல इति=என்று एतदेव तु=இதைமட்டும் विनिवेदयामि=தெரிவித்துக்கொள்கிறேன்.

(க - ரை) நிஷித்தமான கார்யங்களைச் செய்யாமல் இருப்பதாலும் விஹிதமான காரியங்களைச் செய்வதாலும் உனக்குப் பிரியமானபடி நடந்துகொள்ள பிரயத்தனப்படுவேன். ஆனால் நித்யவிதிகள் விஷயத்தில் என் சக்திக்குத் தக்கபடிதான் என்னால் நடந்துகொள்ள முடியும். இவ்விதமே சாஸ்திரங்களால் அனுமதிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் மறுபடியும் ஒரு வார்த்தை தெரிவித்துக்கொள்கிறேன். "சக்தியை அனுஸரித்து" என்பதற்கு என்ன அர்த்தம்? புத்தி சக்தியை அனுஸரித்தா? அல்லது கார்யம் செய்யும் சக்தியை அனுஸரித்தா? "புத்தி சக்தியை அனுஸரித்து" என்று அர்த்தம் வைத்துக்கொள்ளும்படி உன்னைப் பிரார்த்திக்கிறேன். [ஏனெனில் கார்யசக்தி பூர்ணமாயிருந்தாலும் புத்தி சக்தி குறைவாயிருந்தால் புத்தி சக்தியின் அளவே கார்யம் செய்ய முடியுமே அன்றி அதிகம் நடைபெறாது.]

36. I shall try to avoid things prohibited and to carry out positive injunctions—according to the best of my ability of course—this being the rule in the case of such injunctions. But, Oh consort of Śiva! in regard

to what is termed "ability" I wish to introduce a qualification *viz.*, that "ability" should be taken to have reference not to "physical ability" but to "one's understanding capacity."

आत्मैव भार इति तं त्वयि यो निधत्ते
सोऽङ्गानि कानि कलयत्वलसः प्रपत्तेः ।
विश्वत्र सात्र तु विलक्षणलक्षणा या
विस्रम्भसम्पदियमेव समस्तमङ्गि ॥ ३७ ॥

*ஆத்மைவ ஃபார இதி தம் த்வயி யோ நிதத்தே*
*ஸோऽங்கா³நி காநி கலயத்வலஸ: ப்ரபத்தே: ।*
*விஶ்வத்ர ஸாத்ர து விலக்ஷணலக்ஷணா யா*
*விஸ்ரம்ப⁴ஸம்பதி³யமேவ ஸமஸ்தமங்கி³ ॥ ௩௭ ॥*

आत्मैव भारः इति = தானே பாரம் என்று तं यः = தன்னையே எவன் त्वयि निधत्ते = உன்னிடம் வைக்கிறானோ सः अलसः = அந்தச் சோம்பேறி प्रपत्तेः = சரணாகதியின் कानि अङ्गानि = எந்த அம்சங்களை कलयतु = நினைப்பான் विश्वत्र सा = அது எங்கும் உள்ளது. अत्र (तु) = இங்கேயோ विलक्षणलक्षणा = தனியான லக்ஷணத்தோடுகூடிய (பிரபத்திக்கு) या = எந்த विस्रम्भसंपत् = பரிபூர்ண நம்பிக்கையோ इयमेव = இதுவே समस्तम् अङ्गि = எல்லா அங்கங்களுடனும் கூடிய அங்கி [ஆகிறது]. [सविलक्षण என்ற அச்சுப்புஸ்தகப் பாடம் तु विलक्षण என்று திருத்தப்பட்டிருக்கிறது. विश्वस्य साक्षिणि என்ற பாடமும் உண்டு. அதுவானால் "லோகசாக்ஷியா யிருப்பவளே" என்று பொருள்.]

(க - ரை) [சரணாகதி சாஸ்திரத்தில் தன் பாரத்தைத் தன் இஷ்ட தெய்வத்தின் திருவடிகளில் இறக்கிவிடுவது

"ஆத்ம நிக்ஷேபம்" என்றும் "ஸரந்யாஸம்" என்றும் சொல்லப்படுகிறது.] தன்னையே பாரமாக நினைத்துத் தன்னை, உன்னிடம் ஸமர்ப்பணம் செய்துகொள்கிற சோம்பேறியான நான் பிரபத்தியின் மற்ற அங்கங்களை [ஆநுகூல்ய ஸங்கல்பம், ப்ராதிகூல்ய வர்ஜனம் முதலியவற்றை] எங்கே செய்யப்போகிறேன். ஐந்து அங்கங்களோடு கூடிய பரந்யாஸம் என்ற சரணாகதி எங்கும் உள்ளது. என்னுடைய பிரபத்திக்குத் தனியாக ஒரு லக்ஷணத்தை ஏற்படுத்திக்கொள்கிறேன். அதாவது, "நீ என்னை ரக்ஷிப்பாய்" என்று நம்பியிருக்கிறேனே இதுவே ஸர்வ அங்கங்களும் பரிபூர்ணமான "அங்கி" (சரணாகதி). இந்த நம்பிக்கை ஒன்றே சரணாகதியில் முக்கியமாதலால், மற்ற அம்சங்கள் என் சரணாகதியில் இருக்கின்றனவா இல்லையா என்று விசாரிக்கவே வேண்டாம் என்பது தாத்பர்யம்.

சரணாகதியின் லக்ஷணம் பின்வருமாறு:—

"आनुकूल्यस्य संकल्पः प्रातिकूल्यस्य वर्जनम् ।
रक्षिष्यतीति विश्वासो गोप्तृत्ववरणं तथा ॥
आत्मनिक्षेपकार्पण्ये षड्विधा शरणागतिः ॥

37. What formalities of self-surrender would that indolent one observe who, considering it a burden offers his self itself to Thee? Surrender with its attendant formalities might have universal vogue, but here in this extra-ordinary mode of self-surrender, the wealth of supreme Faith is itself the Totality.

त्वत्प्रेरणेन मिषतः श्वसतोऽपि मातः
प्रामादिकेऽपि सति कर्मणि मे न दोषः ।
मात्रैव दत्तमशनं ग्रसतः सुतस्य
को नाम वक्ष्यति शिशोरतिभुक्तिदोषम् ॥ ३८ ॥

த்வத்ப்ரேரணேந மிஷத: ஶ்வஸதோऽபி மாத:
ப்ராமாதிகேऽபி ஸதி கர்மணி மே ந தோஷ: ।
மாத்ரைவ தத்தமஶநம் க்ரஸத: ஸுதஸ்ய
கோ நாம வக்ஷ்யதி ஶிஶோரதிபுக்திதோஷம் ॥ ௩௮

मातः=தாயே! त्वत्प्रेरणेन=உன் ஏவுதலால் मिषतः=பார்ப்பவனும் श्वसतः अपि=மூச்சுவிடுபவனும் (ஆன எனக்கு) प्रामादिके=தவறுதலான कर्मणि सति अपि=கர்மா இருப்பினும் मे न दोषः=என்னிடம் தோஷமில்லை. मात्रा एव दत्तम्=தாயாலேயே கொடுக்கப்பட்ட अशनम्=ஆகாரத்தை ग्रसतः शिशोः सुतस्य=சாப்பிடும் சிறு பிள்ளைக்கு अतिभुक्तिदोषम्=அதிபோஜனம் என்ற குற்றத்தை को नाम वक्ष्यति=யார்தான் சொல்லுவார்கள்?

(க - ரை) உன் ஸங்கல்பத்தால் நான் ஓடியாடிக் கொண்டிருக்கிறேன். என் தவறுதல்களால் நான் குற்றவாளியாகமாட்டேன். தாய் ஊட்டும் அன்னத்தை உண்ணும் குழந்தை அதிபோஜனம் செய்த குற்றத்திற்கு உள்ளாகுமா?

38. Under your guidance I live and act, Oh Mother, and if I err I am certainly not to blame. Who will accuse a child of overeating when he is being fed by his mother's own hand.

मुक्तिं सिसाधयिषतां निजयैव बुद्ध्या
प्रारब्धकर्म भवतु प्रतिबन्धहेतुः ।
त्वामेव साधनतयापि समाश्रितानां
तुल्यं तदम्ब यदि कस्तव वीरवादः ॥ ३९ ॥

முக்திம் ஸிஸாதயிஷதாம் நிஜயைவ புத்த்யா
ப்ராரப்தகர்ம பவது ப்ரதிபந்தஹேது: ।
த்வாமேவ ஸாதநதயாபி ஸமாஶ்ரிதாநாம்
துல்யம் ததம்ப யதி கஸ்தவ வீரவாத: ॥ ௩௯ ॥

निजया=தன் बुद्ध्या एव=புத்தியைக்கொண்டே मुक्तिम्=முக்தியை सिसाधयिषताम्=பெற விரும்புவோர்க்கு प्रारब्धकर्म=பயனைக் கொடுக்கத் தொடங்கிய கர்மா प्रतिबन्धहेतुः भवतु=தடங்கலாக இருக்கலாம். साधनतया=உதவியாக त्वामेव=உன்னையே समाश्रितानाम् अपि=ஆச்ரயித்தவர்களுக்கும் तत्=அது तुल्यम् यदि=ஒரேமாதிரியானால் अम्ब=தாயே! तव कः वीरवादः=உனக்கு என்ன சிறப்புப் பேச்சு?

(க - ரை) பிராரப்தகர்மா முக்திக்கு இடையூறு செய்தல் ஞானமார்க்கத்தில் போனவர்களுக்கு நியாயமாகும். உன்னையே முக்திக்கு மார்க்கமாய் நினைத்துச் சரணாகதி செய்த எனக்கும் அந்த இடையூறு உண்டென்றால் உன் மஹிமை எங்கே போயிற்று?

ஞானிகள் தன் புத்தியையே முக்திக்கு உபாயமாய்க் கொண்டவர்கள். நானோ உன்னையே உபாயமாய் அடைந்தவன். இரண்டுபேர்களுக்கும் ஒரே திட்டமாகலாமா?

39. It is conceivable that accumulated past Karma which has commenced its operative period will stand in the way of attainment of salvation by those

who seek to achieve their end relying upon their own intellect. But mother, if the same obstruction be pleaded also in the case of those who have resorted to you as the means of achieving salvation, where is your boasted Omnipotence.

प्रारब्धकर्म गिरिजे भवदाश्रिताना-
मन्यत्र संक्रमय नाशय वा समूलम् ।
मर्त्याश्च खल्वपि विषं वपुषि प्रसक्तं
संक्रामयन्ति परतोऽपि च नाशयन्ति ॥ ४० ॥

ப்ராரப்தகர்ம கிரிஜே பவதாஶ்ரிதாநா-
மந்யத்ர ஸங்க்ரமய நாஶய வா ஸமூலம் ।
மர்த்யாஶ்ச வல்வபி விஷம் வபுஷி ப்ரஸக்தம்.
ஸங்க்ராமயந்தி பரதோऽபி ச நாஶயந்தி ॥ ௪௰ ॥

गिरिजे=மலைமகளே! भवदाश्रितानाम्=உன்னை அண்டினவர்களுடைய प्रारब्धकर्म=பிராரப்தகர்மாவை अन्यत्र=வேறிடத்தில் संक्रमय=மாற்று समूलं नाशय वा=அல்லது அடியோடு அழித்துவிடு. मर्त्याश्च खल्वपि=மனிதர்கள் கூட அல்லவா वपुषि प्रसक्तम्=சரீரத்தில் ஸம்பந்தப்பட்ட विषम्=விஷத்தை परतः संक्रामयन्ति=வேறிடத்தில் மாற்றிவிடுகிறார்கள். अपि च नाशयन्ति=அழித்தும் விடுகிறார்கள்.

(க - ரை) சரணாகதி செய்தவனின் பிராரப்த கர்மாவை, மாந்திரிகன் விஷத்தை எடுப்பதுபோல் நீ விலக்கிவிட்டு அவனுக்கு உடனே முக்தியைக் கொடு.

40. Daughter of the Hills, in the case of those who seek refuge with you, you had better transfer elsewhere or utterly destroy their past Karma. Do not

even men transfer elsewhere or destroy the poison which has permeated the body.

त्वद्दर्शनश्रवणवन्दनचिन्तनादि-
ष्वक्षाणि देवि विनियुज्य यथाधिकारम् ।
रक्षेत्यसंख्यभवसंभृतयैव मैत्र्या
रुन्ध्यां यदि स्थिरममून्यधुनैव न स्युः ॥ ४१ ॥

த்வத்₃ர்ஶநஶ்ரவணவந்த₃நசிந்தநாதி₃-
ஷ்வக்ஷாணி தே₃வி விநியுஜ்ய யதா₂தி₄காரம் ।
ரக்ஷேத்யஸங்க்₂யப₄வஸம்ப்₄ருதயைவ மைத்ர்யா ।
ருந்த்₄யாம் யதி₃ ஸ்தி₂ரமமூந்யது₄நைவ ந ஸ்யு: ॥ ௪௧ ॥

देवि=தேவியே! त्वद्दर्शनश्रवणवन्दनचिन्तनादिषु=உன்னை பார்ப்பது உன் மஹிமையைக் காதால் கேட்பது உன்னை நமஸ்கரிப்பது உன்னைத் தியானிப்பது முதலான காரியங்களில் अक्षाणि=என் புலன்களை यथाधिकारम्=தக்கவாறு विनियुज्य=நியமித்து रक्ष इति=என்னை ரக்ஷி என்று असंख्यभव-संभृतया मैत्र्या एव=எண்ணிறந்தபிறவிகளில் ஏற்பட்ட நட்பினுல் स्थिरं रुन्ध्याम् यदि=பிடிவாதமாய் நிர்ப்பந்திப்பேனேயானுல் अमूनि=இந்த பிராரப்தகர்மாக்கள் अधुनैव=இப்போதே न स्युः=ஒழிந்துவிடும்.

(க - ரை) கணக்கில்லாத ஜன்மங்களில் நான் உன்னை உபாஸித்துவந்த சலுகையினுல் பிடிவாதமாய் உன்னை நிர்ப்பந்திப்பேனேயானுல் இப்பொழுதே இந்த பிராரப்த கர்மாக்கள் பறந்துபோய்விடும் என்பது நிச்சயம். ஆனுல் நான் அதற்காக என்னுடைய கண், காது, சரீரம், மனஸ் இவைகளை உன் விஷயத்தில் ஈடுபடும்படி செய்யவேண்

டும். அப்படிச் செய்வதுதான் கிரமமாகவிருக்கிறது. ஆதலால்தான் கஷ்டப்படுகிறேன்.

41. Goddess, if I appropriately employ my senses in seeing your form, hearing your glories, worshipping you and contemplating upon you and implore you doggedly, taking advantage of my familarity with you in innumerable past births, I am sure that they (the past deeds) would vanish even now.

त्रातव्य एष इति चेत् करुणा मयि स्यात्
त्रायस्व किं सुकृतदुष्कृतचिन्तया मे ।
कर्तुं जगत्तिरयितुं च विशृङ्खलायाः
कर्मानुरोध इति कं प्रति वञ्चनेयम् ॥ ४२ ॥

த்ராதவ்ய ஏஷ இதி சேத் கருணா மயி ஸ்யாத்
த்ராயஸ்வ கிம் ஸுக்ருதது³ஷ்க்ருதசிந்தயா மே ।
கர்தும் ஜமத்திரயிதும் ச விஶ்ருங்வலாயா:
கர்மாநுரோத இதி கம் ப்ரதி வஞ்சநேயம் ॥ ௪௨ ॥

एष त्रातव्यः इति= இவனை ரக்ஷிக்கவேண்டுமென்று मयि= என்மீது करुणा= தயை स्यात् चेत्= இருக்குமேயானால் त्रायस्व= ரக்ஷி. मे= என்னுடைய सुकृतदुष्कृतचिन्तया किम्= புண்ணிய பாபங்களைப்பற்றி ஆலோசிப்பது ஏன்? जगत्= உலகத்தை कर्तुम्= உண்டு பண்ணவும் तिरयितुं च= அழிக்கவும். विशृङ्खलायाः= தடையற்றவளான உனக்கு कर्मानुरोधः= கர்மாவை அநுசரித்தல் इति= என்ற इयं वञ्चना= இந்த கபடம் (ஏமாற்றுதல்) कं प्रति= யாரிடத்தில்?

(க - ரை) என்னை ரக்ஷிக்கவேண்டுமென்று உனக்கு கருணை ஏற்பட்டுவிட்டால், என் புண்ணிய பாபங்களை

நீ ஏன் யோசிக்கவேண்டும். இந்த உலகத்தையே ஸ்ருஷ்டிக்கவும் அழிக்கவும் சக்தியுடைய உனக்கு, என் கர்மாவை மீறி என்னைக் காக்க சக்தியில்லை என்பது கபடமான வார்த்தை.

42. If you have taken compassion on me and resolved to protect me, do protect me. Why this needless review of my past good or bad deeds. When we know how according to your whims and fancy you create or destroy the world, shall we be deceived by your plea that you have to subordinate your grace to the force of Karma?

त्वय्यर्पितं प्रथममप्पययज्वनैव
स्वात्मार्पणं विदधता स्वकुलं समस्तम् ।
का त्वं महेशि कुलदासमुपेक्षितुं मां
को वानुपासितुमहं कुलदेवतां त्वाम् ॥ ४३ ॥

த்வய்யர்பிதம் ப்ரதமமப்பயயஜ்வநைவ
ஸ்வாத்மார்பணம் விதததா ஸ்வகுலம் ஸமஸ்தம் ।
கா த்வம் மஹேசி குலதாஸமுபேக்ஷிதும் மாம்
கோ வாநுபாஸிதுமஹம் குலதேவதாம் த்வாம் ॥ ௪௩

प्रथमम्=முதலில் स्वात्मार्पणं विदधता=தன்னை அர்ப்பணம் செய்துகொண்ட अप्पययज्वना एव=அப்பய்ய தீக்ஷிதராலேயே त्वयि=உன்னிடத்தில் समस्तं स्वकुलम्=தன் வம்சம் முழுவதும் अर्पितम्=அர்ப்பணம் செய்யப்பட்டது. महेशि=ஈச்வரியே, कुलदासम्=பரம்பரை அடிமையான माम्=என்னை उपेक्षितुम्=உபேக்ஷிக்க का त्वम्=நீ யார்? कुलदेवतां त्वाम्=பரம்பரை தைவமான உன்னை अनुपासितुम्=உபாஸிக்காமலிருப்பதற்கு अहं को वा=நான்தான் யார்?

(க - ரை) என் பெரியபாட்டனரான ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதரவர்கள் முன்பே (ஆத்மார்ப்பண ஸ்துதியில்) தன்னையும் தன் வம்சத்தையும் உன்னிடம் அர்ப்பணம் செய்துவிட்டார். நான் உனக்குப் பரம்பரை அடிமை. நான் உன்னை உபாஸிக்காமல் இருக்கவும் முடியாது. நீ என்னை உபேக்ஷிக்கவும் முடியாது.

43. When Śrī Appayya Dīkṣita dedicated himself to you, he has already dedicated the entire progeny of his line also to you. Oh, Consort of the highest Lord, you cannot neglect a hereditary slave, nor can I desist from serving you, my hereditory Goddess.

मौढ्यादहं शरणयामि सुरान्तरं चेत्
किं तावता स्वमपि तस्य भवामि मातः ।
अज्ञानतः परगृहं प्रविशन् परस्य
स्वत्वं प्रयास्यति पशुः किमु राजकीयः ॥ ४४ ॥

மௌட்யாதஹம் ஶரணயாமி ஸுராந்தரம் சேத்
கிம் தாவதா ஸ்வமபி தஸ்ய பவாமி மாத: ।
அஜ்ஞாநத: பரக்ருஹம் ப்ரவிஶந் பரஸ்ய
ஸ்வத்வம் ப்ரயாஸ்யதி பஶு: கிமு ராஜகீய: ॥ ௪௪ ॥

मातः = தாயே, मौढ्यात् = அறியாமையால் सुरान्तरम् = வேறு தேவதையை अहम् = நான் शरणयामि चेत् = சரண் புகுந்தால் (பாதுகாப்பவனாகக்கொண்டால்) तावता = அவ்வளவோடு மட்டும் तस्य स्वमपि = அந்த தேவதையின் சொத்தாகக்கூட किं भवामि = நான் ஆவேனா? अज्ञानतः = அறியாமையினால் परगृहं प्रविशन् = பிறர் வீட்டில் நுழைகிற राजकीयः पशुः = அரண்மனை மாடு परस्य स्वत्वम् = பிறருக்கு உரியதாக किमु प्रयास्यति = ஆகுமா?

(க - ரை) நான் அறியாமையால் வேறு தேவதையைச் சரணமடைந்திருந்தால் அதனால் அந்த தேவதையின் சொத்தாக நான் ஆகிவிடுவேனா? அரண்மனைப்பசு பிறர் வீட்டில் தவறி நுழைந்தால் அது பிறருடைய சொத்தாக ஆகிவிடுமா?

44. If on account of ignorance, I seek the protection of some other Divinity, I do not by that much become the property of that Divinity. If an animal (Cow) belonging to the King enters another's house on account of its stupidity, will it become the property of that another?

आधाय मूर्धनि वृथैव भरं महान्तं
मूर्खा निमज्जथ कथं भवसागरेऽस्मिन् ।
विन्यस्य भारमखिलं पदयोर्जनन्या
विस्रब्धमुत्तरत पल्वलतुल्यमेनम् ॥ ४५ ॥

ஆதாய மூர்தனி வ்ருதைவ பரம் மஹாந்தம்
மூர்கா நிமஜ்ஜத கதம் பவஸாகரேऽஸ்மிந் ।
விந்யஸ்ய பாரமகிலம் பதயோர்ஜநந்யா
விஸ்ரப்தமுத்தரத பல்வலதுல்யமேநம் ॥ ௪௫ ॥

मूर्खाः=மூடர்களே! वृथैव=வீணாகவே महान्तं भरम्=பெரிய சுமையை मूर्धनि=தலையில் आधाय=வைத்துக்கொண்டு अस्मिन्=இந்த भवसागरे=பிறவிக்கடலில் कथं=ஏன் निमज्जथ=முழுகுகிறீர்கள்? जनन्याः=தாயின் पदयोः=கால்களில் अखिलं भारम्=எல்லா பாரத்தையும் विन्यस्य=வைத்துவிட்டு पल्वलतुल्यम्=சிறு குட்டையைப்போல் एनम्=இதை विस्रब्धम्=கவலையில்லாமல் उत्तरत=தாண்டுங்கள்.

(க - ரை) மூடர்களே! இந்த அஹங்காரமமகாரங்களாகிற பெரும் சுமையைத் தூக்கிக்கொண்டு வீணில் ஸம்ஸார ஸாகரத்தில் முழுகுகிறீர்கள்? இச் சுமையை அம்பிகையின் பாதாரவிந்தங்களில் தள்ளி விட்டுச் சுகமாக இக்கடலைத் தாண்டலாமே.

45. Fools, why do you sink in the ocean of birth and death needlessly carrying on your head a huge burden. Throw the whole burden at the feet of the mother and cross this with a light heart as you would a pond.

क्वेदं पतिष्यति वपुः क्व ततो नु गम्यं
को दण्डयिष्यति कियन्तमनेहसं वा ।
किं तस्य संतरणसाधनमित्यनन्ता
चिन्ता स्थिता त्वयि शनैरवतारिता सा ॥ ४६ ॥

க்வேதம் பதிஷ்யதி வபு: க்வ ததோ நு கம்யம்
கோ தண்டயிஷ்யதி கியந்தமநேஹஸம் வா ।
கிம் தஸ்ய ஸந்தரணஸாதநமித்யநந்தா
சிந்தா ஸ்திதா த்வயி ஶநைரவதாரிதா ஸா ॥ சசு ॥

इदं वपुः = இந்த சரீரம் क्व पतिष्यति = எங்கே விழப் போகிறது? ततः = பின்பு क्व नु गम्यम् = எங்கே போக வேண்டியது? कः दण्डयिष्यति = யார் தண்டிக்கப்போகிறார்? कियन्तं वा अनेहसम् = எவ்வளவு காலமோ? तस्य संतरणसाधनम् किम् = அதை தாண்டும் உபாயம் என்ன इति स्थिता = என்ற सा अनन्ताचिन्ता = அந்த கணக்கற்ற கவலை எல்லாம் त्वयि = உன்னிடம் शनैः = மெதுவாக (கொஞ்சம் கொஞ்சமாக) अवतारिता = இறக்கிவைக்கப்பட்டது.

(க - ரை) இந்த சரீரம் மறைவதெங்கே? பின்பு எங்குச் செல்லவேண்டும்? யார் தண்டிப்பவன்? எவ்வளவு காலம் தண்டனை? அதை எவ்விதம் கடப்பது? என்றிவ்விதம் எனக்கிருந்த மனக்கவலைகளையெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக உன்னிடம் ஒப்புவித்துவிட்டேன்.

46. Where will this body fall? Where will I be taken afterwards? Who will punish me? and for what length of time? By what means I can get over that? These and all the other never ending cares which were worrying me I have by degrees emptied down at your feet.

ज्ञानं दिशेयमुत तेन विनोद्धरेयं
प्रारब्धमप्यपलपेयमुतानुरुन्ध्याम् ।
इत्थं सकृत्प्रपदनैकवशंवदाया
मातुर्मयि प्रववृते महतीह चिन्ता ॥ ४७ ॥

ஜ்ஞாநம் திஸேயமுத தேந விநோத்ருரேயம்
ப்ராரப்தமப்யபலபேயமுதாநுருந்த்யாம் ।
இத்தம் ஸக்ருத் ப்ரபதநைகவஸம்வதாயா
மாதுர்மயி ப்ரவவ்ருதே மஹதீஹ சிந்தா ॥ சஎ ॥

ज्ञानं दिशेयम्=ஞானத்தை கொடுக்கட்டுமா? उत=அல்லது तेन विना=அது இல்லாமலே उद्धरेयम्=கை தூக்கிவிட்டுமா? प्रारब्धम्=பிராரப்தத்தை अपि अपलपेयम्=இல்லையென்று சொல்லிவிடட்டுமா? उत=அல்லது अनुरुन्ध्याम्=அனுஸரிக்கட்டுமா? इत्थम्=இவ்விதம் सकृत्प्रदनैकवशंवदायाः=ஒருதரம் சரணாகதியினாலேயே தயைவந்து (நமக்கு) ஸ்வாதீனமான मातुः=அன்னைக்கு इह=இங்கு महती चिन्ता=அதிகமான ஆலோசனை मयि=என் விஷயத்தில் प्रववृते=ஏற்பட்டது.

(க - ரை) இவ்விதம் நான் ஒரு முறை சரணாகதி செய்தவுடன், என் அன்னைக்கு, தயையினால் பெரும் கவலை யுண்டாகிவிட்டது. "இவனை நான் ஞானத்தைக் கொடுத்து ரக்ஷிக்கட்டுமோ, அல்லது அது இல்லாமலே ரக்ஷித்துவிடட்டுமோ? இவனுடைய பிராரப்த கர்மாவை இல்லையென்று அடித்துவிடலாமா? அல்லது அதை அனுஸரித்தே பார்க்கலாமா?" என்றவாறு.

47. When I had thus supplicated but once, Mother was so moved with compassion for me that she began to consider within herself anxiously whether she should import knowledge unto me or lift me up even without that process and whether she should over rule all my Past Karma or abide by their sway.

एतज्जडाजडविवेचनमेतदेव
क्षित्यादितत्त्वपरिशोधनकौशलं च ।
ज्ञानं च शैवमिदमागमकोटिलभ्यं
मातुर्यदङ्घ्रियुगले निहितो मयात्मा ॥ ४८ ॥

ஏதஜ்ஜடாஜடவிவேசநமேததேவ
க்ஷித்யாதிதத்வபரிசோதநகௌசலம் ச ।
ஜ்ஞாநம் ச சைவமிதமாகமகோடிலப்யம்
மாதுர்யதங்க்ரியுகளே நிஹிதோ மயாத்மா ॥ சஅ ॥

मया = என்னால் मातुः अङ्घ्रियुगले = அன்னையின் பாதங்களில் आत्मा यत् निहितः = ஆத்மா வைக்கப்பட்டது என்பது யாதொன்று உண்டோ एतत् = இதுவே जडाजडविवेचनम् = ஜடம், சேதனம் என்ற விவேகம். एतदेव च = இதுவே क्षित्यादितत्त्वपरिशोधनकौशलम् = பூமி முதலான தத்வங்களைப் பரி

சிலனை செய்யும் திறமை. इदम्=இதுவே आगमकोटिलभ्यम्= கோடிசாஸ்திரங்களால்கிடைத்த शैवं ज्ञानं च=சிவஞானமும்.

(க - ரை) ஜகன்மாதாவின் சரணங்களில் என் ஆத்மாவை நான் அர்ப்பணம் செய்ததே நான் ஸாங்கியம் சைவாகமம் முதலிய சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்ததன் பயனாகும்.

குறிப்பு:—ப்ரக்ருதி புருஷன் என்பது ஸாங்க்ய சாஸ்திரத்தின் வியவஹாரம்.

பூமி முதல் ஸதாசிவம்வரை 36 தத்துவங்கள் சைவ சாஸ்திரங்களில் சொல்லப்படுகின்றன.

சிவாகமங்களில் சைவஞானம் உபதேசிக்கப்படுகின்றது.

48. This is the power of differentiation between dead matter and living organisms. This is the skill in examining the different natures of the Tattvas, Earth and others. This is the true vision of Śiva obtained through searching a crore of Āgamas *viz.*, that I have laid my whole self at the feet of Mother.

षट्त्रिंशदावरणमध्यजुषि त्वदङ्घ्रौ
हालास्यनाथदयिते निहितो मयात्मा ।
भूभूतलत्रिदशवर्तिषु कः क्षमेत
तच्चक्षुषापि निभृतेन निरीक्षितुं माम् ॥ ४९ ॥

ஷட்த்ரிம்ஶதாவரணமத்யஜுஷி த்வதங்க்ரௌ
ஹாலாஸ்யநாததயிதே நிஹிதோ மயாத்மா ।
பூபூதலத்ரிதஶவர்திஷு க: க்ஷமேத
தச்சக்ஷுஷாபி நிப்ருதேந நிரீக்ஷிதும் மாம் ॥ ௪௯ ॥

हालास्यनाथदयिते=ஹாலாஸ்பதியின் மனைவியே, षट्त्रिंश-दावरणमध्यजुषि=36 ஆவரணங்களுக்கு மத்தியில் இருக்கும்

त्वदङ्घ्रौ=உன் பாதத்தில் मया आत्मा निहितः=என்னால் ஆத்மா வைக்கப்பட்டது. तत्=ஆகையால் भूभूतलत्रिदशवर्तिषु=மூன்று லோகங்களில் இருப்பவர்களில் निभृतेन=மறைவாகக்கூட चक्षुषा=கண்ணால் मां निरीक्षितुम् अपि=என்னை பார்க்கக்கூட कः क्षमेत=யாரால் முடியும்?

(க - ரை) முப்பத்தியாறு தத்வங்களாகிற ஆவரணங்களுக்கு மத்தியில் வீற்றிருக்கும் தேவியின் சரணங்களில் ஆத்மார்ப்பணம் செய்த என்னை, மூன்று உலகங்களிலும் எவன் கண்ணைத் திறந்து பார்க்கமுடியும்? தேவியின் கலை ஏற்பட்டுவிட்டபடியால் பக்தனைப் பிறன் பார்க்கவும் கண் கூசச் செய்யும் திவ்ய தேஜஸ் அவனிடம் விளங்குகிறது.

49. Oh Consort of the Lord of Hālāsya, I have laid my whole being at your feet who are seated in the midst of thirty-six ramparts who among the inhabitants of the Earth, Nether regions and Heaven will now dare even to steal a glance at me.

बन्धं हरिष्यसि सुखं वितरिष्यसीति
निश्चप्रचं निखिलमम्ब तदास्त एव ।
संप्रत्यहं त्वयि निधाय भरं समस्तं
यन्निर्वृणोमि किमितोऽपि ममापवर्गे ॥ ५० ॥

பந்தம் ஹரிஷ்யஸி ஸுகம் விதரிஷ்யஸீதி
நிஶ்சப்ரசம் நிகிலமம்ப ததாஸ்த ஏவ ।
ஸம்ப்ரத்யஹம் த்வயி நிதாய பரம் ஸமஸ்தம்
யந்நிர்வ்ருணோமி கிமிதோऽபி மமாபவர்கே ॥ ௫௰ ॥

अम्ब=அன்னையே बन्धं=பந்தத்தை हरिष्यसि=போக்கடிப்பாய். सुखम्=சுகத்தை वितरिष्यसि=கொடுப்பாய் इति तत्

निखिलम्=என்பதெல்லாம் निश्चप्रचम्=நிச்சயமாக आस्ते एव= இருப்பதே. सम्प्रति=இப்பொழுது अहम्=நான் समस्तं भरम्=எல்லா பாரத்தையும் त्वयि=உன்னிடத்தில் निधाय வைத்துவிட்டு यत् निर्वृणोमि=சந்தோஷப்படுகிறேனோ इतोऽपि=இதைக்காட்டிலும் मम=எனக்கு अपवर्गे—மோக்ஷத்தில் किम्=என்ன இருக்கிறது.

(க - ரை) என் துக்கங்களைப் போக்கி ஸுகத்தைத் தந்து நீ என்னை ரக்ஷிப்பது நிச்சயம். இருந்தாலும் என் பாரத்தை உன்னிடம் தள்ளிவிட்டு இந்த நிமிஷத்திலேயே நான் சிந்தையற்றவனாக இருக்கிறேனே. இதை விட மோக்ஷத்தில்தான் என்ன ஸௌக்கியம் அதிகமாக இருக்கப்போகிறது?

50. Mother, all this is now certain to happen, namely that you will free me from my bonds and take me to eternal bliss. But I doubt if even in salvation, I can derive greater pleasure than that which I now enjoy after having relieved myself by placing all my burden before you.

काश्यां निपातय वपुः श्वपचालये वा
स्वर्गं नय त्वमपवर्गमधोगतिं वा ।
अद्यैव वा कुरु दयां पुनरायतौ वा
कः संभ्रमो मम धने धनिनः प्रमाणम् ॥ ५१ ॥

காஶ்யாம் நிபாதய வபு: ஶ்வபசாலயே வா
ஸ்வர்கம் நய த்வமபவர்கமதோகதிம் வா ।
அத்யைவ வா குரு தயாம் புநராயதௌ வா
க: ஸம்ப்ரமோ மம தநே தநிந: ப்ரமாணம் ॥ ருக ॥

त्वम्=நீ वपुः=என் சரீரத்தை काश्यां निपातय=காசியில் மரிக்கச்செய், वा=அல்லது श्वपचालये=பறைச்சேரியில் மரிக்கச்செய். स्वर्गं नय=ஸ்வர்க்கத்திற்குக் கொண்டுபோ. अपवर्गम्=மோக்ஷத்தை (नय=) அடையச்செய். अधोगतिं वा=அல்லது கீழ்ப்பட்ட கதிக்கு (नय)=உட்படுத்து. अद्यैव=இன்றே वा=அல்லது पुनः आयतौ वा=வருங்காலத்திலாவது दयां कुरु=தயை செய். मम=எனக்கு. कः संभ्रमः= என்ன பரபரப்பு? धनम्=சொத்து விஷயத்தில் धनिनः प्रमाणम्=சொத்துக்காரர்கள் பொறுப்புள்ளவர்கள்! (வைத்தது சட்டம்.)

(க-ரை) நீ எனக்குக் காசியில் மரணத்தைக் கொடுத்தாலும் சரி, பறைச்சேரியில் மரணத்தைக் கொடுத்தாலும் சரி, என்னை ஸ்வர்க்கத்தில் சேர்ப்பித்தாலும் சரி, எனக்கு மோக்ஷத்தைக் கொடுத்தாலும் சரி அல்லது என்னை நரகத்தில் தள்ளினாலும் சரி, நீ இன்றைக்கே என்மீது தயை புரிந்தாலும் சரி, வெகுகாலம் கழித்து தயை புரிந்தாலும் சரி, எனக்கு அதைப்பற்றி இனிக் கவலையில்லை. சொத்துக்காரன் சொத்தை எப்படி வேண்டுமோ அப்படி உபயோகப்படுத்திக்கொள்ளலாம்.

51. Grant me riddance of my mortal body in Kāśī or in the abode of the eaters of dog's flesh (Caṇḍālas). Take me to heaven, grant me salvation or thrust me down to perdition. Send your grace presently or delay it indefinitely. I am not in the least concerned about all that. For the owner can put to any kind of use his property.

नाहं सहे तव कथाश्रवणान्तरायं
नाहं सहे तव पदार्चनविच्युतिं वा ।
मोक्षं दिशैतदविरुद्धमिदं न चेत् स्या-
न्नैवास्तु मातरपवर्गमहोपसर्गः ॥ ५२ ॥

நாஹம் ஸஹே தவ கதாஶ்ரவணாந்தராயம்
நாஹம் ஸஹே தவ பதார்சநவிச்யுதிம் வா ।
மோக்ஷம் திஶைததவிருத்தமிதம் ந சேத் ஸ்யா-
ந்நைவாஸ்து மாதரபவர்கமஹோபஸர்க: ॥ ருஉ ॥

तव=உன் कथाश्रवणान्तरायम्=மஹிமைகளைக் கேட்பதற்கு இடையூறுகளை अहम्=நான் न सहे=பொறுக்கமாட்டேன். तव=உன் पदार्चनविच्युतिं वा=பாதங்களை பூஜிப்பதிலிருந்து ஒழிவையும் अहम्=நான் न सहे=பொறுக்கமாட்டேன். एतदविरुद्धम्=இதற்கு விரோதமில்லாதபடி मोक्षं दिश=மோக்ஷத்தைக் கொடு. इदम्=இது न चेत् स्यात्=முடியாதென்றால் मातः=தாயே अपवर्गमहोपसर्गः=மோக்ஷம் என்ற பெரிய இடையூறு नैव अस्तु=வேண்டவே வேண்டாம்.

(க - ரை) நாமகீர்த்தனம், அர்ச்சனை செய்தல், இவைகளால் உபாஸிக்க இடமுண்டென்றால் மோக்ஷம் வரட்டும். இல்லையெனில் நமக்கு மோக்ஷம் என்ற அந்த பெரிய இடையூறு வேண்டவே வேண்டாம்.

52. I cannot tolerate anything standing between me and my listening to talks about you. Neither can I brook any interruption of my offering worship at your feet. If you grant me salvation let it not prove an impediment to the above two desires of mine. If it is likely to be otherwise, Oh Mother, I court not that misfortune in the shape of salvation.

आचूडमाचरणमम्ब तवानुवार-
मन्तः स्मरन् भुवनमङ्गलमङ्गमङ्गम् ।
आनन्दसागरतरङ्गपरम्पराभि-
रान्दोलितो न गणयामि गतान्यहानि ॥ ५३ ॥

*ஆசூடமாசரணமம்ப தவாநுவார-*
*மந்த: ஸ்மரந் புவநமங்களமங்கமங்கம் ।*
*ஆநந்தஸாகரதரங்கபரம்பராபி-*
*ராந்தோளிதோ ந கணயாமி கதாந்யஹாநி ॥ ருங ॥*

अम्ब=தாயே! आचूडम्=சிரஸ்முதல், आचरणम्=பாதம் வரை भुवनमङ्गलम्=ஜகத்திற்கு க்ஷேமகரமான तव=உமது अङ्गम् अङ्गम्=அங்கங்கள் ஒவ்வொன்றையும் अनुवारम=அடிக்கடி अन्तः स्मरन्=மனதில் தியானித்து आनन्दसागरतरङ्गपरम्पराभिः=ஆனந்தக்கடலின் அலைவரிசைகளினல் आन्दोलितः=ஊஞ்சலாட்டப்பட்டவனாக (நான்) गतानि अहानि=கடந்த நாட்களை न गणयामि=கணக்கிடாமல் இருக்கிறேன்.

(க - ரை) தேவியின் திவ்யமங்கள ஸ்வரூபத் தியானத்தில் அமர்ந்த எனக்கு, நாள் போவதுகூடத் தெரியவில்லை. ஆனந்தக்கடலில் மூழ்கியிருக்கிறேன்.

குறிப்பு:—இது முதல் சுமார் ஐம்பது ச்லோகங்களில் கவி தேவியின் பாதம்முதல் சிரஸ்வரை ஒவ்வொரு அங்கமாக தியானம் செய்துகொண்டு வர்ணிக்கிறார்.

53. Mother, calling up before my mental vision as often as possible each and every part of your divine personality which ensures the prosperity of the World, I feel like being borne on the succession of waves of the ocean of joy and scarcely ever keep a reckoning of the days that flee past.

पाषाणतोऽपि कठिने शिरसि श्रुतीनां
प्रायः परिभ्रमवशादिव पाटलाभम् ।
अम्ब स्मरेयममृतार्णवमाथलब्ध-
हैयङ्गवीनसुकुमारमिदं पदं ते ॥ ५४ ॥

*பாஷாணதோऽபி கடினே ஶிரஸி ஶ்ருதீநாம்*
*ப்ராய: பரிப்ரமவஶாதிவ பாடலாபம் ।*
*அம்ப ஸ்மரேயமம்ருதார்ணவமாதலப்த-*
*ஹையங்கவீநஸுகுமாரமிதம் பதம் தே ॥ ருச ॥*

अम्ब = அன்னையே! पाषाणतोऽपि = கல்லைக்காட்டிலும் कठिने = கடினமான श्रुतीनाम् = வேதங்களின் शिरसि = தலையில் (உபநிஷத்துக்களில்) प्रायः = அதிகம் परिश्रमवशात् इव = ஸஞ்சரிப்பதினால்போல் पाटलाभम् = சிவந்த நிறமானதும் अमृतार्णवमाथलब्धहैयङ्गवीनसुकुमारम् = அம்ருதக்கடலைக் கடைந்து எடுத்த வெண்ணெய்போல் ம்ருதுவானதுமான इदम् = இந்த ते पदम् = உன் பாதத்தை स्मरेयम् = தியானம் செய்வேன்.

(க - ரை) அன்னையின் வெண்ணெய்போல் ம்ருதுவான பாதத்தை ஸ்மரிக்கிறேன். அப்பாதம் சிவந்திருப்பதைப் பார்த்தால் கல்லைவிட கடினமான உபநிஷத்துக்களில் சஞ்சரிப்பதால் அப்படியோ என்று நினைக்கும்படி இருக்கிறது.

குறிப்பு: உபநிஷத்துக்களால் தம் உட்கருத்தாக உத்தேசிக்கப்படுபவள் அவள். ஆதலால் அவள் அவைகளில் சஞ்சரிப்பதாய்ச் சொல்லப்படுகிறாள்.

54. Mother, I shall meditate upon your foot which is tender as butter produced by churning the ocean of nectar and which looks as if it grew red consequent

upon its treading on the crown of the Vedas (Upanishads) harder than stone.

ये नाम सन्ति कतिचिद् गुरवस्त्रिलोक्यां
तेषामपि स्वयमुपेतवता गुरुत्वम् ।
पादेन मूर्ध्नि विधृतेन वयं तवाम्ब
संसारसागरमिमं सुखमुत्तरामः ॥ ५५ ॥

*யே நாம ஸந்தி கதிசித் குரவஸ்த்ரிலோக்யாம்*
*தேஷாமபி ஸ்வயமுபேதவதா குருத்வம் ।*
*பாதேந மூர்த்நி வித்ருதேந வயம் தவாம்ப*
*ஸம்ஸாரஸாகரமிமம் ஸுகமுத்தராம: ॥ ௫௫ ॥*

अम्ब=*அன்னையே!* त्रिलोक्याम्=*மூவுலகிலும்* ये नाम=*எந்த* कतिचित्=*சிலர்* गुरवः=*பெரியவர்களாக (கனம் பொருந்தியவர்களாக)* सन्ति=*இருக்கின்றனரோ* तेषाम् अपि=*அவர்களுக்குங்கூட* गुरुत्वम्=*பூஜிக்கத்தகுந்ததாய் இருத்தலை* स्वयम्=*தானே* उपेतवता=*அடைந்திருக்கிற* तव पादेन=*உன் பாதத்தை* मूर्ध्नि विधृतेन=*சிரஸில் தரித்துக்கொண்டு* वयम्=*நாம்* इमम्=*இந்த* संसारसागरम्=*ஸம்ஸாரஸாகரத்தை* सुखम्=*சுலபமாக* उत्तरामः=*தாண்டுவோம்.*

(க - ரை) *நாம் பூஜ்யர்களாகக்கொண்டாடும் ரிஷிகள், தேவர்கள், மும்மூர்த்திகள், இவர்கள் எல்லாம் எந்த உன் சரணத்தைத் தங்களால் பூஜிக்கத்தக்கதென மதிக்கின்றனரோ அதை நான் தலையில் தாங்கிக் கொண்டு பிறவிக்கடலை லகுவாய்த் தாண்டுவேன்.*

55. We shall gaily cross the ocean of birth and death by bearing on our heads your foot which is adored (as weighty) in all the three worlds.

साधारणे स्मरजये निटिलाक्षिसाध्ये
भागी शिवो भजतु नाम यशः समग्रम् ।
वामाङ्घ्रिमात्रकलिते जननि त्वदीये
का वा प्रसक्तिरिह कालजये पुरारेः ॥ ५६ ॥

ஸாதாரணே ஸ்மரஜயே நிடிலாக்ஷிஸாத்யே
பாகீ ஶிவோ பஜது நாம யஶ: ஸமக்ரம் ।
வாமாங்க்ரிமாத்ரகலிதே ஜநநி த்வதீயே
கா வா ப்ரஸக்திரிஹ காலஜயே புராரே: ॥ ௫௬ ॥

निटिलाक्षिसाध्ये=நெற்றிக்கண்ணுல் நிறைவேற்றத்தக்கதும், साधारणे=இருவருக்கும் பொதுவானதுமான स्मरजये=மன்மத விஜயத்தில் भागी शिवः=பாதிப்பங்குடைய சிவன் समग्रं यशः=கீர்த்தியை முழுவதையும் भजतु नाम=வேண்டுமானுல் அடையட்டும். जननि=அம்மா! वामाङ्घ्रिमात्रकलिते=இடது காலினுல்மட்டும் ஸாதிக்கப்பட்ட त्वदीये इह=உன்னுடையதான இந்த कालजये=மரண வெற்றியில் पुरारेः=சிவனுக்கு का वा प्रसक्तिः=என்ன ஸம்பந்தம்?

(க - ரை) நெற்றியின் மத்தியில் உள்ள கண்ணுல் மன்மதனை எரித்ததில் சிவனுக்குப் பாதிபங்குதான் உண்டு. அதில் அவர் கீர்த்தியை முழுவதையும் அபஹரித்துக்கொண்டார். அது போனுல் போகட்டும். இடது காலால் உதைத்து யமனை ஜயித்ததில் அவருக்கு என்ன ஸம்பந்தம்?

[அர்த்தநாரீச்வரரின் இடது பக்கம் ஈச்வரி.]

56. Let alone the fact that in the victory over cupid, which was achieved by both, by the look of the eye on the forehead, Siva who was only an ally, appro-

priated to himself, the whole credit. But Mother, what had Siva ever to do with the overthrow of Death which was achieved singly by the left foot belonging to you?

स्यात् कोमलं यदि मनो मम विश्वमात-
स्तत्पादयोर्मृदुलयोस्तव पादुकास्तु ।
स्यात् कर्कशं यदि करग्रहणे पुरारे-
रश्माधिरोहणविधौ भवतूपयोगः ॥ ५७ ॥

ஸ்யாத் கோமலம் யதி மநோ மம விஶ்வமாத-
ஸ்தத்பாதயோர்ம்ருதுளயோஸ்தவ பாதுகாஸ்து ।
ஸ்யாத் கர்கஶம் யதி கரக்ரஹணே புராரே-
ரஶ்மாதிரோஹணவிதௌ பவதூபயோக: ॥ ருஎ ॥

विश्वमातः = ஜகன்மாதாவே! मम मनः = என் மனம் यदि कोमलं स्यात् = மிருதுவானதானல் तत् = அது तव = உனது मृदुलयोः = மிருதுவான पादयोः = பாதங்களுக்கு पादुका अस्तु = செருப்பாகட்டும் कर्कशं यदि स्यात् = கடினமானதானல் पुरारेः = பரமேச்வரனுடைய करग्रहणे = பாணிக்ரஹண ஸமயத்தில் अश्माधिरोहणविधौ = கல்லை மிதிக்கும் காரியத்தில் उपयोगः = பிரயோஜனம் भवतु = இருக்கட்டும்.

(க - ரை) என் மனத்தை உன் சரணத்தில் அர்ப்பணம் செய்கிறேன். அது மிருதுவானல் அதை நீ பாதுகையாக உபயோகித்துக்கொள். அது கடினமானல் உன் விவாஹத்தில் நீ மிதிக்கும் கல்லாக அதை அங்கீகரித்துக்கொள். எவ்விதத்திலும் உன் சரணஸ்பர்சம் அதற்கு இருக்கவேண்டும்.

57. World Mother, If you find my mind soft, use it as slippers for your feet. If you find it hard, let it serve as the stone which you stand on during your wedding with Purari.

प्रस्निग्धमुग्धरुचिपादतले भवत्या
लग्नं दृढं यदिह मे हृदयारविन्दम् ।
एषैव साग्रभुवनाद्विशतीपतित्व-
साम्राज्यसूचनकरी तव पद्मरेखा ॥ ५८ ॥

ப்ரஸ்நிக்₃த₄முக்₃த₄ருசிபாத₃தலே ப₄வத்யா
லக்₃நம் த்₃ருட₄ம் யதி₃ஹ மே ஹ்ருத₃யாரவிந்த₃ம் ।
ஏஷைவ ஸாக்₃ரபு₄வநாத்₃விஶதீபதித்வ-
ஸாம்ராஜ்யஸூசநகரீ தவ பத்₃மரேகா₂ ॥ ருஅ ॥

भवत्याः = உன்னுடைய प्रस्निग्धमुग्धरुचिपादतले = மிருதுவானதும் அழகான காந்தியுடையதுமான பாதத்தின் அடித்தலத்தில் इह मे हृदयारविन्दम् = இந்த என் ஹ்ருதயமாகிற தாமரை यत् दृढं लग्नम् = நன்றாய்ப் பதிந்திருப்பதால் एषा एव = = இதுவே तव = உன் साग्रभुवनाद्विशतीपतित्वसाम्राज्यसूचनकरी = இருநூற்றுக்கு மேற்பட்ட லோகங்களுக்கு அரசியாகவிருக்கும் சக்ரவர்த்தினி யோகத்தைக் குறிக்கக் கூடிய पद्मरेखा = பத்மரேகை (ஆகின்றது.).

(க - ரை) என் மனமாகிற தாமரை உன் மிருதுவான சரணத்தில் ஒட்டிக் கொண்டதினால் தாமரைச்சுவடுடன் கூடிய உன் பாதம், உனக்கு அகிலலோகஸாம்ராஜ்யத்தைச் சூசனை செய்யும் பத்மரேகையாக விளங்குகிறது. மிகத்தாழ்ந்த என்வரையில் பரவிய உன் ஸாம்ராஜ்யம் பெரிது என்பது நிச்சயம்.

[சைவாகமங்களில் 224-புவனங்கள் கூறப்படுகின்றன].

58. My lotus heart sticking firmly with adoration to the sole of your feet soft and of lovely hue, becomes the lotus mark for you indicating your supreme Imperial sway over ll the 224 worlds.

अप्राकृतीं मृदुलतामविचिन्त्य किञ्चि-
दालम्बितासि पदयोः सुदृढं मया यत् ।
तन्मे भवार्णवनिमज्जनकातरस्य
मातः क्षमस्व मधुरेश्वरि बालकृत्यम् ॥ ५९ ॥

அப்ராக்ருதீம் ம்ருதுலதாமவிசிந்த்ய கிஞ்சி-
தாலம்பிதாஸி பதயோ: ஸுத்ருடம் மயா யத் ।
தந்மே பவார்ணவநிமஜ்ஜநகாதரஸ்ய
மாத: க்ஷமஸ்வ மதுரேஶ்வரி பாலக்ருத்யம் ॥ருகூ॥

मातः = தாயே! मधुरेश्वरि = மதுரைக்கரசியே! अप्राकृतीम् = எங்கும் காணமுடியாத मृदुलताम् = மிருதுத் தன்மையை किञ्चित् = கொஞ்சம் अविचिन्त्य = ஆலோசிக்காமல் पदयोः = உன் பாதங்களில் सुदृढम् = கெட்டியாக मया = என்னால் यत् आलम्बितासि = நீ பிடித்துக் கொள்ளப்பட்டிருக்கிறாய் என்றாலும் भवार्णवनिमज्जनकातरस्य = பிறவிக் கடலில் முழுகுவதிலிருந்து பயங்கொண்ட मे = என்னுடைய तत् बालकृत्यम् = அந்தச் சிறு பிள்ளைத்தனத்தை क्षमस्व = பொறுத்துக்கொள்.

(க - ரை) ஜலத்தில் மூழ்குபவன் உயிர்தப்ப தனக்குக் கிடைத்ததை கெட்டியாய்ப் பிடித்துக்கொள்வது ஸகஜம். அதுபோல் ஸம்ஸார ஸாகரத்தில் மூழ்கித் தத்தளிக்கும் நான், கரையேற, உன் பாதத்தை இறுகப் பிடித்துக்கொண்டேன். உன் மிருதுவான பாதத்தை இப்படி நோகச் செய்யும் குற்றத்தைப் பொறுத்தருள்வாய்.

59. Queen of Madhurā, Mother, if I have clung to your feet, with rather a rough grasp fotgetting their exquisite tenderness, pardon my fault, as I do so under

the fright of my imminent sinking in the ocean of birth and death.

यत्रानमन् पशुपतिः प्रणयापराधे
मन्दं किल स्पृशति चन्द्रकलाञ्चलेन ।
पुष्पार्चनेऽपि मृदितं पदयोर्युगं त-
न्मातस्तुदन्ति न कथं परुषा गिरो मे ॥ ६० ॥

யத்ராநமந் பஶுபதி: ப்ரணயாபராதே
மந்தம் கில ஸ்ப்ருஶதி சந்த்ரகலாஞ்சலேந ।
புஷ்பார்ச்சநேऽபி ம்ருதிதம் பதயோர்யுகம் தன்-
மாதஸ்துதந்தி ந கதம் பருஷா கிரோ மே ॥ ௬௰ ॥

मातः=தாயே! प्रणयापराधे=சலுகையினால் செய்த குற்றத்தைப்பற்றி மன்னிப்புக் கேட்க यत्र=எந்தப் பாதங்களில் आनमन्=வணங்கும் पशुपतिः=பரமசிவன் चन्द्रकलाञ्चलेन=சந்திர கலையின் நுனியால் (அவைகளை) मन्दं स्पृशति किल=மெள்ளத் தொடுகிறாரோ पुष्पार्चने अपि=புஷ்பத்தினால் அர்ச்சனை செய்யுங்காலும் मृदितम्=பீடிக்கப்படும் तत् पदयोः युगम्=அந்த இருபாதங்களை परुषाः=கரடுமுரடான मे गिरः=என் வார்த்தைகள் कथं न तुदन्ति=பீடிக்காமல் இருக்குமா?

(க - ரை) எந்த உன் பாதங்களின் மிருதுத் தன்மையை அறிந்த பரமசிவன் சிருங்கார கேளிகளில் உன் மனஸ்தாபத்தைப் போக்குவதற்காக வணங்கும்போது அப்பாதங்களில், தன் சிரங்களில் இருக்கும் சந்திரகலை தொட்டதும் தொடாததுமாக இருக்கும்படி வெகு ஜாக்கிரதையாக வணங்குகிறாரோ, எந்த உன் பாதங்களுக்குப் புஷ்பங்களினால் அர்ச்சனை செய்யுங்காலும்

அதிர்ச்சி ஏற்படுகின்றதோ, அப்பேர்ப்பட்ட பாதங்களை என் கரடு முரடான வார்த்தைகளினால் வர்ணித்து நோகச் செய்கிறேனே.

60. Mother, I am afraid that my harsh (unpolished) words are calculated to give pain to your feet which Śiva touches cautiously with the tip of his crescent moon while prostrating before them to make amends for his indiscretions in his amours, and which are hurt even by the flowers being thrown against them in worship.

अव्याजसुन्दरमनुत्तरमप्रमेय-
मप्राकृतं परममङ्गलमङ्घ्रिपद्मम् ।
संदर्शयेदपि सकृद्भवती दयार्द्रा
द्रष्टास्मि केन तदहं तु विलोचनेन ॥ ६१ ॥

அவ்யாஜஸுந்தரமநுத்தரமப்ரமேய-
மப்ராக்ருதம் பரமமங்களமங்க்ரிபத்மம் ।
ஸந்தர்சயேதபி ஸக்ருத் பவதீ தயார்த்ரா
த்ரஷ்டாஸ்மி கேந ததஹம் து விலோசநேந ॥ சுக ॥

अव्याजसुन्दरम्=இயற்கை அழகு வாய்ந்ததும் अनुत्तरम्=எதற்கும் மேலானதும் अप्रमेयम्=அறிவுக்கு எட்டாததும் अप्राकृतम्=திவ்யமானதும் परममङ्गलम्=பரமமங்களமானதுமான अङ्घ्रिपद्मम्=தாமரை போன்ற பாதத்தை दयार्द्रा भवती=தயையினால் இளகிய நீ सकृत्=ஒரு முறை संदर्शयेत् अपि=(எனக்கு) காண்பிப்பாய் என்றாலும் तत्=அதை केन विलोचनेन=எந்தக் கண்ணினாலே अहं तु=நான் द्रष्टास्मि=பார்க்கப்போகிறேன்?

(க-ரை) தேவியின் சரண கமலங்களின் அழகைப் பார்க்க இந்த என் கண்கள் பிரயோஜனமில்லை. ஆகையால்

என்னிடம் கருணையால் தேவி எனக்குச் சரணதர்சனம் கொடுத்தாலும் அக்காட்சியைக் காணக் கண்ணையும் கொடுக்கவேண்டும்.

குறிப்பு: லோகாதீதமான காட்சியைக் காண சர்மசக்ஷுஸ் உபயோகப்படாது ஆதலால் திவ்யசக்ஷுஸைக் கேட்கிறார். அடுத்த ச்லோகத்தில் அதுவும் பிரயோஜனப்படாது என்று சொல்லப்போகிறார்.

61. Supposing through compassion for me, you admit me to the sight of your lotus-feet, with what eyes shall I be able to behold them—the feet which are by nature lovely, to which nothing can be superior, of which scarcely anyone can have any intellectual comprehension, which (being divine) are the very opposite of things earthy and which are the prime source of all auspiciousness.

दिव्या दृशोऽपि दिविषद्ग्रहणोचितानि
वस्तूनि काममवधारयितुं क्षमन्ते ।
त्वन्मात्रवेद्यविभवे तव रूपधेये
त्वद्भाव एष शरणं परिशेषितो नः ॥ ६२ ॥

திவ்யா த்ருசோऽபி திவிஷத்க்ரஹணோசிதாநி
வஸ்தூநி காமமவதாரயிதும் க்ஷமந்தே ।
த்வந்மாத்ரவேத்யவிபவே தவ ரூபதேயே
த்வத்பாவ ஏஷ சரணம் பரிசேஷிதோ ந: ॥ கூ௨ ॥

दिव्याः दृशः अपि=தைவிகம் பொருந்திய கண்கள் கூட दिविषद्ग्रहणोचितानि=தேவர்கள் பார்க்கக்கூடிய वस्तूनि=வஸ்துக்களை अवधारयितुम्=அறிந்துகொள்ள कामं क्षमन्ते=சக்தியுள்ளவை என்றாலும் त्वन्मात्रवेद्यविभवे=உன்னால் மட்டும் அறிந்து

கொள்ளத்தகுந்த மஹிமையோடுகூடிய तव रूपधेये=உன் ஸ்வரூபத்தைப் பார்க்கும் விஷயத்தில் एषः=இந்த त्वद्भावः= உன் ஸாரூப்யமே नः=எங்களுக்கு शरणम्=கதி என்று परिशेषितः=கடைசியாக ஏற்படுகிறது.

(க - ரை) தேவர்களுக்குரிய பார்வைசக்தியை நீ எனக்குக் கொடுத்தாலும் அது எனக்குப் பிரயோஜனமில்லை. ஏனெனில் தேவர்கள் பார்க்கக்கூடியதைத் தானே அப்போது நானும் பார்க்கலாம். அவர்களுக்கும் எட்டாத உன் சரணத்தை நான் எப்படிப் பார்ப்பது? தேவர்களும் கண்டுகொள்ளமுடியாத உன் உருவத்தின் பெருமையை நீயே அறிவாய். அதைக் கண்டு அறிய நானும் நீயாகவே ஆவதைத் தவிர வேறு வழியை அறியோம். உன் ஸாரூப்யத்தைத் தவிர உன் ஸ்வரூபத்தின் மஹிமையை அறிய வேறு கதியில்லை.

62. Even divine eyesight can only comprehend things which the heavenly beings can see. In the matter of beholding your form, to the magnificence of which you alone can be witness, we have, as the only resort, to pray for becoming yourself.

अस्मिन् महत्यनवधौ किल कालचक्रे
धन्यास्तु ये कतिपये शुकयोगिमुख्याः ।
लीनास्त्वदङ्घ्रियुगले परिशुद्धसत्त्वा-
स्तानात्मनस्तव नखानवधारयामः ॥ ६३ ॥

அஸ்மின் மஹத்யநவதௌ கில காலசக்ரே
தந்யாஸ்து யே கதிபயே ஶுகயோகிமுக்யா: ।
லீநாஸ்த்வதங்க்ரியுகளே பரிஶுத்தஸத்வா-
ஸ்தாநாத்மநஸ்தவ நகாநவதாரயாம: ॥ ௬௩ ॥

अनवधौ=முடிவில்லாத महति=மிகப் பெரிய अस्मिन्=இந்த कालचक्रे=கால அளவில் शुकयोगिमुख्याः=சுகர் முதலிய ये कतिपये=எந்தச் சிலர் परिशुद्धसत्त्वाः=சுத்தமான ஆத்மாவை உடையவர்களாக त्वदङ्घ्रियुगले=உன் பாதங்களில் लीनाः किल=லயித்தார்களோ ते तु=அவர்களே धन्याः=பாக்கிய சாலிகள். तान् आत्मनः=அந்த சுத்தாத்மாக்களே तव नखान् अवधारयामः=உன் நகங்கள் என்று ஊஹிக்கிறோம்.

(க - ரை) அநாதியாய் சுழன்று வரும் இந்த கால சக்கரத்தில், சுகர் முதலிய சிலரே உன்னைச் சரணமடைந்து உன் சரணங்களிலேயே லயத்தையும் அடைந்திருக்கின்றனர். அவர்களுடைய சுத்தமான ஆத்மஸ்வரூபம் தான் உன் நகங்களாகப் பிரகாசிக்கின்றன என்று சொல்லலாம்.

63. Those few fortunate men like the sage Śuka, who, in all this endlessly revolving amplitude of ages, becoming rarified, into their spiritual essences merged into your feet, are, we believe, now shining there in the guise of the toe nails.

आशैशवान्ममतया कलितस्त्वयासा-
वानृण्यमम्ब तव लब्धुमना मृगाङ्कः ।
स्वात्मानमेव नियतं बहुधा विभज्य
त्वत्पादयोर्विनिदधे नखरापदेशात् ॥ ६४ ॥

ஆஶைஶவாந்மமதயா கலிதஸ்த்வயாஸா-
வாந்ருண்யமம்ப தவ லப்துமநா ம்ருகாங்க: ।
ஸ்வாத்மாநமேவ நியதம் பஹுதா விபஜ்ய
த்வத்பாதயோர்விநிதே நகராபதேஶாத் ॥ சுச ॥

अम्ब=அன்னையே! आशैशवात्=குழந்தைப் பருவம் முதல் त्वया=உன்னால் ममतया=அபிமானத்துடன் कलितः=வளர்க்கப்பட்ட असौ मृगाङ्कः=இந்தச் சந்திரன் तव आनृण्यं लब्धुमनाः உன்னிடம் கடன் பட்டதைத் தீர்ப்பதற்கு, स्वात्मानमेव=தன் ஸ்வரூபத்தையே नियतम्=நிச்சயமாக बहुधा=பலவாறு विभज्य=துண்டித்து नखरापदेशात्=நகங்கள் என்ற வியாஜத்தால் त्वत्पादयोः=உன் பாதங்களில் विनिदधे=வைத்தான்.

(க-ரை) இளம்பிறையைச் சிரஸில் தரிப்பதால் சந்திரனைக் குழந்தைப் பருவம்முதல் தேவியானவள் அபிமானித்து வந்ததாய்ச் சொல்லப்படுகிறது. சந்திரன் தன் நன்றி அறிவைச் செலுத்தி ஈச்வரியின் பிரஸாதத்தை யடையும்பொருட்டு, தானே பல பிறைகளாகத் தன்னை வகுத்துக்கொண்டு நகங்களாகி, தேவியின் சரணங்களில் பிரகாசிக்கிறான்போலும். (தேவியின் நகங்கள் சந்திரகலைகள் போல் விளங்குகின்றன என்பது கருத்து.)

64. Mother, It looks as if this moon who from his childhood was brought up by you with affection had dedicated himself at your feet having divided his disc into several phases and assumed the guise of the toe nails in order to show his gratitude.

नान्तः प्रवेशमयते किमपि श्रुतं मे
नास्तिक्यवादशिलया प्रतिरुध्यमानम् ।
तत्पातयाम्यहमिमां महतीमधस्तात्
पादोदकेन कियता परदेवतायाः ॥ ६५ ॥

நாந்த: ப்ரவேஶமயதே கிமபி ஶ்ருதம் மே
நாஸ்திக்யவாதஶிலயா ப்ரதிருத்⁴யமாநம் ।

*தத்பாதயாம்யஹமிமாம் மஹதீமயஸ்தாத்*
*பாதோதகேந கியதா பரதேவதாயா: ॥ ௬௫ ॥*

नास्तिक्यवादशिलया=நாஸ்திகவாதம் என்ற கல் பாறையால் प्रतिरुध्यमानम्=தடுக்கப்பட்டு किमपि श्रुतं=எந்த வேதார்த்தமும் मे अन्तः प्रवेशम् न अयते=என் உள்ளத்தில் நுழையவில்லை. तत्=ஆதலால் महतीम्=பெரிய इमाम्=இந்த கல் பாறையை परदेवतायाः=அம்பிகையின் कियता=எவ்வளவு पादोदकेन=பாதத்தில் அபிஷேகம் செய்த ஜலத்தால் अहम्=நான் अधस्तात्=கீழே पातयामि=தள்ளுவேன்.

(க - ரை) வேதங்களும் அதை அநுஸரித்த சாஸ்திரங்களும் ஞானம், சிரத்தை, பக்தி இவைகளைப் பற்பல வழிகளில் புகட்டி எனக்கு ஆஸ்திக்யம் என்ற பரலோக நம்பிக்கையை உண்டுபண்ண சப்தங்களைப் பிரவாஹம் போல் பெருகவிடுகின்றன. அந்தப் பிரவாஹம் எனக்குள் நுழையாதபடி என் அவநம்பிக்கை என்ற கல்பாறை அடைத்துக்கொண்டிருக்கிறது. அம்பிகையின் அபிஷேக தீர்த்தத்தை அளவில்லாமல் பானம்பண்ணி அந்த அடைப்புப்பாறையைத் தள்ளிவிட்டு ஆஸ்திக்ய உபதேசங்கள் உள்ளே நுழையும்படி செய்துகொள்ள வேண்டும். [தேவியின் அனுக்ரஹத்தால் ச்ரேயஸுக்குக் காரணமான ஆஸ்திக்யபுத்தி உண்டாகவேண்டும். அந்த அநுக்ரஹம் தேவியை ஆராதிப்பதால் உண்டாகும். துர்வாஸனையால் ஏற்பட்ட நாஸ்திக்யபுத்தி விலக வேறு உபாயமில்லை. நாஸ்திக்யம் என்பது தனக்கு பிரத்யக்ஷமானதைத் தவிர வேறு விஷயங்களை இல்லையென்று ஸாதிப்பது—புண்ணியம் பாபம் ஜன்மாந்தரம் ஈச்வரன் பரலோகம் என்ற அப்ரத்யக்ஷங்களை நிராகரிப்பது.]

65. The scriptural injunctions do not reach my heart as the passage is blocked by the rock of scepticism. To push away this obstacle, I do not know how great a flood of the waters washing the feet of the Supreme Goddess I may have to take in.

संनाहिभिर्यमभटैः परिवार्यमाणे
मय्यर्भके करुणया स्वयमापतन्त्याः ।
आकर्णयेयमपि नाम विरामकाले
मातस्तवाङ्घ्रिमणिनूपुरशिञ्जितानि ॥ ६६ ॥

ஸந்நாஹிபிர்யமபடை: பரிவார்யமாணே
மய்யர்பகே கருணயா ஸ்வயமாபதந்த்யா: ।
ஆகர்ணயேயமபி நாம விராமகாலே
மாதஸ்தவாங்க்ரிமணிநூபுரஶிஞ்ஜிதாநி ॥ கசு ॥

मातः = தாயே! संनाहिभिः = ஆரவாரிக்கின்ற यमभटैः = யமதூதர்களால் परिवार्यमाणे = சூழப்பட்ட अर्भके = குழந்தையான मयि = என்னிடத்தில் करुणया = தயையினால் स्वयम् = தானாக आपतन्त्याः = ஓடிவருகிற तव = உன்னுடைய अङ्घ्रिमणि-नूपुरशिञ्जितानि = காலில் அணிந்த ரத்னச்சிலம்புகளின் ஒலியை विरामकाले = மரிக்கும் தருணத்தில் अपि नाम आकर्णयेयम् = கேட்பேனா?

(க - ரை) தன் சிசுவுக்கு விபத்து வந்தால் ஒரு தாய் எப்படி அதைக் காப்பாற்ற ஓடி வருவாளோ, அவ்விதம் யமதூதர்கள் வந்து சூழ்ந்துகொள்ளும் மரண சமயத்தில் என்னை அவர்களிடமிருந்து மீட்க தயையினால் நீ ஓடி வரும்போது உன் கால் சிலம்புகளின் சப்தம் என் காதில் விழுமா? [மரண காலத்தில் யமதூதர்கள்வசம் என்னை விடாமல் நீ வந்து என்னை ஆட்கொள்ளவேண்டும்.]

66. Will it be given to me, Oh Mother, to hear the tinckling music of your anklets even as you rush forward towards me with compassion during my last moments when I, your child, am surrounded by the messengers of Death.

**ब्रह्मेशकेशवमुखैर्बहुभिः कुमारैः**
**पर्यायतः परिगृहीतविमुक्तदेशम् ।**
**उत्सङ्गमम्ब तव दास्यसि मे कदा त्वं**
**मातृप्रियं किल जडं सुतमामनन्ति ॥ ६७ ॥**

*ப்ரஹ்மேசகேசவமுகைர்பஹுபி: குமாரை:*
*பர்யாயத: பரிக்ருஹீதவிமுக்ததேசம் ।*
*உத்ஸங்கமம்ப தவ தாஸ்யஸி மே கதா த்வம்*
*மாத்ருப்ரியம் கில ஜடம் ஸுதமாமநந்தி ॥ ௬௭ ॥*

अम्ब = அம்மா! ब्रह्मेशकेशवमुखैः = ப்ரம்மா சிவன் விஷ்ணு முதலிய बहुभिः = அநேகம் कुमारैः = புத்திரர்களால் पर्यायतः = மாறி மாறி परिगृहीतविमुक्तदेशम् = அடைந்ததும் விடப்பட்டதுமான तव = உனது उत्सङ्गम् = மடியை त्वम् = நீ मे = எனக்கு कदा = எப்போது दास्यसि = கொடுக்கப்போகிறாய்? जडम् = ஜடனான सुतं किल = பிள்ளையை அல்லவா मातृप्रियम् = தாய்க்குச் செல்வமானவனாக आमनन्ति = சொல்லுகிறார்கள்!

(க - ரை) ஜகன்மாதவான உனக்கு ப்ரம்ம விஷ்ணு ருத்ரர்கள் முதல் மானிடர்கள்வரை எல்லோரும் குழந்தைகள்தான். ஆனால் மூடனான பிள்ளையை தாய்க்குச் செல்லப்பிள்ளை என்று உலகத்தில் சொல்லுவார்களே! ஆதலால் நான்தான் உனக்குச் செல்லப்பிள்ளை. என்னை

எப்போது எடுத்து, உன் மடியில் வைத்து லாலனை செய்யப்போகிறாய்?

67. They say that the dullest of the sons, becomes the pet of the mother, Mother dear, when are you going to take me on your lap, where the innumerable children of yours including Brahmā, Īśvara and Viṣṇu have reposed in succession?

ऊरौ शिरस्तव निवेश्य दयावितीर्ण-
संव्यानपल्लवसमीरविनीतखेदम् ।
अत्रैव जन्मनि विभोः परमोपदेश-
माकर्णयेयमपि किं मणिकर्णिकायाम् ॥ ६८ ॥

ஊரௌ ஶிரஸ்தவ நிவேஶ்ய தயாவிதீர்ண-
ஸம்வ்யாநபல்லவஸமீரவிநீதகேதம் ।
அத்ரைவ ஜந்மநி விபோ: பரமோபதேஶ-
மாகர்ணயேயமபி கிம் மணிகர்ணிகாயாம் ॥ சு அ ॥

दयावितीर्णसंव्यानपल्लवसमीरविनीतखेदम्=தயையால் வீசப்பட்ட மெல்லிய உத்தரீயத்தின் காற்றினால் போக்கடிக்கப் பட்ட சிரமத்தை உடைய (என்) शिरः=தலையை तव= உனது ऊरौ=தொடையில் निवेश्य=வைத்து अत्र जन्मनि एव= இந்த ஜன்மத்திலேயே विभोः=விச்வேச்வரனுடைய परमोपदेशम्=உத்தமமான உபதேசத்தை मणिकर्णिकायाम्=மணி கர்ணிகையில் किं आकर्णयेयमपि=கேட்பேனா?

(கு-ரை) [காசியில் மரிப்பவர்களுக்கு ஸ்ரீ விச்வேச்வரர் நிர்யாண காலத்தில் காதில் ராமதாரக மந்த்ரத்தை உபதேசித்து முக்தியளிக்கிறார் என்பது சாஸ்திரம்.] காசி க்ஷேத்ரத்தில் பிராணவியோக காலத்தில் என் சிரமத்தைப்

பொறுக்கமாட்டாமல் என்னை மடியில் போட்டுக்கொண்டு உன் முந்தாணியால் விசிறி, நீ, எனக்குக் களைதீரச்செய்து கொண்டிருக்கும்போது பிரபுவின் முக்தியளிக்கக்கூடிய உபதேசத்தை காதால் கேட்கும் பாக்கியம் எனக்கு இந்த ஜன்மத்திலேயே கிடைக்குமா?

68. Shall I be so fortunate as to hear in this life itself at Maṇikarṇikā, the soul-liberating communication from the Lord, while you having placed my head on your lap, assuage my pains by fanning my face out of pity with the edge of your upper garment? (Maṇikarṇikā is a bathing ghat on the Ganges just opposite to the temple of Viśveśvara, Benares.)

काञ्चीगुणग्रथितकाञ्चनचेलदृश्य-
चण्डातकांशुकविभापरभागशोभि ।
पर्यङ्कमण्डलपरिष्करणं पुरारे-
र्ध्यायामि ते निखिलमम्ब नितम्बबिम्बम् ॥ ६९ ॥

காஞ்சீகுணக்ரதிதகாஞ்சநசேலத்ருஶ்ய-
சண்டாதகாம்ஶுகவிபாபரபாகஶோபி ।
பர்யங்கமண்டலபரிஷ்கரணம் புராரே:
த்யாயாமி தே நிகிலமம்ப நிதம்பபிம்பம் ॥ கூகூ ॥

अम्ब = தாயே! काञ्चीगुणग्रथितकाञ्चनचेलदृश्यचण्डातकांशुकविभापरभागशोभि = அரைஞாண்கயிற்றினால் சுற்றிக் கட்டப்பட்ட பொன்னுடையால் அழகு வாய்ந்த உள்ளாடையாகிற உடையின் காந்தியினால் எடுத்துக் காட்டப்படும் சோபையை உடையதும் पुरारेः = சிவனது पर्यङ्कमण्डलपरिष्करणम् = உயர்ந்த மஞ்சத்திற்கு அலங்காரமானதுமான ते =

உனது निखिलं नितम्बबिम्बम्=பரிபூர்ணமான நிதம்ப மண்டலத்தை ध्यायामि=தியானம் செய்கிறேன்.

(க - ரை) உள் ஆடை (பாவாடை அல்லது நிஜார்) மேல் ஆடை ஒட்டியாணம் இவைகளால் பலவிதமான காந்திகளோடு, பிரகாசிக்கும் உன் நிதம்பப்ரதேசத்தை தியானிக்கிறேன். [ஒட்டியாணத்தின் ரத்னங்களும் மேலாடையின் பொன்னிறமும் உள் ஆடையின் தனியான காந்தியும் ஒன்றுக்கொன்று எடுத்துக் காட்டிப் பிரகாசிக்கின்றன.]

குறிப்பு:—அச்சுப் புஸ்தகத்தில் 'चण्डातप' என்ற பாடம் அபத்தமாயிருக்கலாம் என்று எண்ணி 'चण्डातक' என்று மாற்றப் பட்டிருக்கிறது.

69. I meditate upon the entire hind parts of yours, which adorn the spacious couch of Purāri, their loveliness being enhanced by the short petticoat which in its turn is shown to advantage by the golden waist-cloth held tight by the zone.

गर्भे निवेश्य भुवनानि चतुर्दशापि
संरक्षितुं कलितनिश्चितया भवत्या ।
प्राकारमेव रचितं परितोऽपि नून-
मूहे सुवर्णमयमेदुरपट्टबन्धम् ॥ ७० ॥

கர்ப்பே நிவேஶ்ய பு⁴வநாநி சதுர்த³ஶாபி
ஸம்ரக்ஷிதும் கலிதநிஶ்சிதயா ப⁴வத்யா ।
ப்ராகாரமேவ ரசிதம் பரிதோऽபி நூந-
மூஹே ஸுவர்ணமயமேது³ரபட்டப³ந்த⁴ம் ॥ எ0 ॥

चतुर्दश=பதினான்கு भुवनानि अपि=லோகங்களையும் गर्भे=கர்ப்பத்தில் निवेश्य=வைத்து संरक्षितुम्=காப்பாற்ற कलित-निश्चितया=எண்ணங்கொண்ட भवत्या=உன்னால் सुवर्णमय-मेदुरपट्टबन्धम्=பொன்மயமான பருத்த ஒட்டியாணமானது प्राकारमेव=பாதுகாப்புச் சுவராகவே परितोऽपि=சுற்றிலும் रचितम्=ஏற்படுத்தப்பட்டதென்று नूनम् ऊहे=திடமாய் ஊஹிக்கிறேன்.

(க - ரை) உன் கர்ப்பத்தில் வஸிக்கும் பதினான்கு லோகங்களையும் ரக்ஷிக்க எழுப்பப்பட்ட மதிற்சுவர் போல் உன் இடுப்பில் ஒட்டியாணம் பிரகாசிக்கிறது.

70. I fancy that the girdle of gold worn by you is really, a perpetual wall raised by you round your waist in pursuance of your resolve to protect all the fourteen worlds accommodated in your womb.

मुक्ताश्च खल्वपि यदि त्रिपुरे भवत्याः
स्तन्याशया स्तनतटं न परित्यजन्ति ।
अस्माकमुद्भटभवज्वरतापितानां-
मार्द्रीभवन्तु वदनानि कुतो न हेतोः ॥ ७१ ॥

முக்தாஶ்ச வல்வபி யதி த்ரிபுரே பவத்யா:
ஸ்தந்யாஶயா ஸ்தநதடம் ந பரித்யஜந்தி ।
அஸ்மாகமுத்பட பவஜ்வர தாபிதாநாம்
ஆர்த்ரீபவந்து வதநாநி குதோ ந ஹேதோ: ॥ எக ॥

त्रिपुरे=ஈச்வரி! मुक्ताश्च खल्वपि=முக்தி அடைந்தவர்கள் (முத்துக்கள்) கூட அல்லவா स्तन्याशया=முலைப்பாலுக்கு ஆசைப்பட்டு भवत्याः=உனது स्तनतटम्=மார்பை यदि न परित्यजन्ति=விடுகிறதில்லையென்றால் उद्भटभवज्वरतापितानाम्=பயங்கர

